சென்னைக் கந்தகோட்ட கந்தபெருமான்

# பதிற்றுப்பத்து அந்தாதி



அருள்மிகு தண்டபாணி சுவாமிகள் அருளியது



தவத்திரு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடிய

# சென்னைக் கந்தகோட்ட கந்தபெருமான் பதிற்றுப்பத்து அந்தாதி

அரும்பதவுரை :

*சோழவந்தான் தவத்திரு கந்தசாமி அடிகள்*



ஸ்ரீ கந்தசுவாமி கோயிலென வழங்கும்

**ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தேவஸ்தானம்**

44, இராசப்பச் செட்டி தெரு,
பூங்காநகர், சென்னை – 600 003.
போன் : 5352192

சென்னைக் கந்தகோட்ட வெளியீடு

முதற்பதிப்பு - 2001



அச்சிட்டோர் :

பா. பிரகாஷ்

11, கங்காதீஸ்வரர் கோவில் தெரு,
புரசைவாக்கம்,
சென்னை – 600 084. ✆ : 643 3017

இயந்திர கணிப்பொறி அச்சுகோர்த்தோர் : கோகுல் கம்ப்யூட்டர்ஸ்'
சென்னை–2. ✆ 841 13 09
M.K.பத்மினி (Computer Operator)

# பதிற்றுப்பத்து அந்தாதி

## பதிப்புரை

திருவோங்கு சென்னைத் தலைநகர்ப் பூங்கா நகரில் சிறந்தோங்கி விளங்கும் கோட்டம், கந்தசாமி கோவில் என வழங்கும் கந்தகோட்டம் ; அருள்மிகு முத்துகுமரன் உறையும் அருட்கோட்டம் ; நம் கந்த கோட்ட முருகனைப் பற்றி பாடிய அருளாளர் பலர் ; அவர்களுள் சிதம்பரம் இராமலிங்க அடிகள் என வழங்கும் வள்ளற் பெருமான், தவத்திரு பாம்பன் சுவாமிகள் திருப்புகழ் வண்ணச் சரபம் தவத்திரு தண்டபாணி அடிகள் முதலாயவர் குறிப்பிடத்தக்கவர்

தவத்திரு தண்டபாணி அடிகள் இயற்றிய நூல்களுள் இன்று வரை அச்சேறாதவை எண்ணில ; அந்தாதி நூல்களும் ஐந்துள; அவற்றுள் அகல் அந்தாதி, வெண்பா அந்தாதி சென்ற ஆண்டுகளில் அச்சிட்டு கந்தர்சஷ்டி அருளமுதாய உவந்தளித்தோம். அதனைத் தொடர்ந்து தண்டபாணி சுவாமிகள் சென்னைக் கந்த கோட்ட முருகப் பெருமான் அருளிய பதிற்றுபத்தாந்தியை வெளியிட்டுக் கந்தர் சஷ்டித் திருவழிழ்தாய் அளிப்பதில் பெருமகிழ்வமைடகின்றோம்.

மிகவும் நைந்த நிலையிலிருந்த பதிற்றுப்பத்தா– ந்தியினைப் படியெடுத்தும், பிழை திருத்தியும் ஒழுங்கு

படுத்தியும் அச்சிட உதவிய எங்கள் பள்ளியின் முன்னாள் தலைமையாசிரியர் நற்றமிழ்க்கவிஞர் நு.ர. ஆறுமுகம் அவர்களுக்கும், நூலினை நன்கு அச்சிட்டுத்தந்த பி.பிரகாஷ் அவர்களுக்கும் எங்கள் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

அருளாளர்களும், ஆன்மநேயத் திருவாளர்களும், அடியார்களும் இந்நூல்லைக் கற்றுத் தெளிந்து கந்தன் திருவருள் பெற வேண்டுகிறோம்.

இவ்வரிய பதிற்றுப்பத்தாந்தாதி மலரை எல்லாம் வல்ல கந்த பெருமான் திருவடிகளுக்குக் காணிக்கை யாக்குகின்றோம்.

வளர்க சமயம்! ஓங்குக கந்தன் புகழ் ! வாழ்க தமிழர் நெறி.

சென்னை

**அன்புடன்**

**பி.பாலசுப்பிரமணியம்,** பி.எஸ்.சி.
சீனியர் அறங்காவலர்

**ஜி.ஏகாம்பரம் செட்டியார்**

**டி.எஸ்.பாலசுந்தரம், Ex.M.C.**

**சி.ஆர்.பழநிதாசு**

**பி.எல்.டி.ஏழுமலை**

அறங்காவலர்கள்

உ

# பதிற்றுப்பத் தந்தாதி

## காப்பு வெண்பா

பன்னரும்சீர்ச் சென்னைப் பதிற்றுப்பத் தந்தாதி
கன்னல்வில்லி நாணுமெழிற் கந்தன் கழற்கணிய
முன்னமொரு வேத முனிமொழிந்த வாசகத்தைப்
பொன்னசலம் தன்னிற் பொறித்தானைப் போற்றுதுமே.

வேதமுனி – வியாசர்; வாசகம் – பாரதக்கதை; பொன்னசலம் –மேருமலை; பொறித்தான் = எழுதிய கணபதி.

## நூல்

அருள்வா ரிதியில் முழுக்காட்டி அகிலத் தினரோடுஅலமருமென்
இருள்வா தனைதீர்த் தருள்வதனுக்கு இந்நாள் இரங்க ஒண்ணாதோ
சுருள்வார் குழல்பார்ப் பதிமதலாய் துணர்பூங் கடப்பந் தொடையானே
தெருள்வார் மலியும் தமிழ்ச்சென்னைத் திருக்கோ யிலில்வாழ்
செவ்வேளே.

சுருள்வார்குழல் – நெளிந்து நீண்ட கூந்தல் 1

சேவ்வே லணிந்து மயிலேறித் தேவர் பெருமான் திருமகளும்
வேவ்வே டுவர்தம் குலக்கொடியும் மேவ ஒருகால் மிளிர்வாயோ
பொய்வே தனைதீர்த் தருள்வோனே பொருப்பா யிரத்தும்
விருப்பானே
கைவே ழத்துக் கிளையானே கவினார் சென்னைக் காவலனே.

திருமகள்–தெய்வயானை; கொடி–வள்ளி; வேழம்–கணபதி 2

காவற் கடவுள் விரும்பும்நலம் கருதிஉருகும் கடையேனை
ஏவற் றொழில்செய் பவர்பாலும் இரக்கவிடுத்தாய் என்செய்வேன்
சேவற் கொடியே உயர்வெனும்சீர் தெரிவார்க் கெளிய சேவகனே
நாவற் பொலம்பூண் அணிவானே நலஞ்சேர் சென்னை நாயகனே.

காவற்கடவுள்–திருமால்; நலம்–உலக நன்மை;
பொலம் பூண்–பொன்னாலான மணிகள் 3

நாயிற் கினிதாம் அவையிருந்தும் நரர்க்கும் எளிதா வனவேட்டுப்
பேயிற் றிரிய எனைவிடல்நின் பெருமைக் கழகாம் எனலாமோ
சேயிற் றடுத்தாண் டருளிலையோ சிந்தை யறியாத் திருட்டுளதே
கோயிற் பெருமை திகழ்சென்னைக் குமரா! அமரர் கோமானே.

அவை–ஊன்உணவு; எளிதாவன–பொருள்; சேயில்–மகன்போல் 4

அமரர்க் கிறைவன் பெருவாழ்வும் ஆகா தெனநீத் தவர்தமையே
தமராக் கருதுந் தமியேனைத் தரைமால் தொடரத் தகும்கொல்லோ
கமரிற் சொரிபால் எனத்தமிழாற் கயவர் தமைபோற் றியுமோர்க்
குமரப் பருவம் நீங்கானே குறைதீர் சென்னைக் குருபரனே.

இறைவன்–இந்திரன்; தமர்–உறவினர்; தரைமால்–உலகஆசை ;
கமர்–பூமியின் வெடிப்பு; கயவர்–லோபியர்; இவர் மனிதர்களைப்
பாடுவது இல்லை; அப்படி ஒரு பாட்டுமில்லை. மதித்தலை இவ்வாறு
கூறினார். 5

குருவா மெனவந் தருள்புரியும் குணம்நின் றனக்குண் டெனக்கூறும்
தொருள்நூல் வழியில் முயல்வேனைத் தெய்வம் உருவாத்
திகழாதுஎன்
மருள்வா திகள்மிக் கிகழ்கின்றார், மனத்தில் உனைப்போல்
வரல்யாரோ
பொருவாப் புகழ்தோய் சென்னை நகர்ப் புலவா! வடிவேற்
புயத்தானே.

மருள்வாதிகள்–மயக்கவுணர்வினர்; என்–எனக்கூறுவார்கள்
தெய்வஉருவமாக வருமென்பவர்களைத் 'தெருள்நூல்'
வழியினரென்றார். 6

புயலும் தருவும் இருநிதியும் போல்வ பிறவும் புலைமுயலும்
கயவர் கரங்கட் கிணையென்னாக் கழறும் கவிஞ ரினும்கடையாய்
அயரும் துயர்ஈண் டளித்தனையே, அந்தோ ஒருசற் றருள்புரிவாய்
வயலும், பொழிலும் புடைசூழும் வளஞ்சேர் சென்னை வாழ்குகனே.

புயல்—மேகம்; தரு—கற்பகமரம்; இருநிதி—சங்கநிதி; பதுமநிதி என்பனபோல் வன்றது, சிந்தாமணி, காதேறு ஆகியவை; இவ்விதம் லோபியரைப் பாடுவார் புலவர் ; பரங்கட்டு—கையின் கொடையினைப்புகழ். 7

'துகனே அமரர்க் கெளியானே குன்றா திபனே குலக்கவுரி
மகனே எனபோற் றிசைத்தவர்முன் வாழ்ந்த விதம்கேட் பதனால்என்
அகநோ வதனை அறிகிலையோ அனிஓர் சிறிதின் றனித்தருள்வாய்
முகம்ஆ றுடையாய் சென்னைநகர் முருகா மறைநூல் முழுமுதலே.

குன்று ஆதிபன்—மலைக்கிறைவன்; அளி—கருணை 8

முதல்வன் கருணைப் பெருங்கடலில் முளைக்கும் முளையாம்
உனைத்துதித்தும்
விதமொன் றியமூ விருசமய விகற்பங் கடந்தும் மெலிவேனோ
பதபங் கயம்என் தலைமீது பதித்துஓர் நிலையும் பகர்ந்தாள்வாய்
கதமிஞ் சியசூர்ச் செகுத்தோனே கடல்சூழ் சென்னைக்
காங்கெயனே.

பதபங்கயம் —திருவடித்தாமரை; கதம்—சினம் 9

காங்கே யனையே பரவுதமிழ்க் கவுமா ரரில்ஓர் கடைத்தாய
பாங்கேய்நலனும்அறியேனைப்பலரும்அவன்றாள் பணிவான்என்(று)
ஈங்கேத் தியசீர்வ லிதடைந்த(து) இயன்ற அருட்பே றெய்தாதோ.
தீங்கே மருவாச் சென்னைநகர்ச் செஞ்சொற் புலவீர் செப்புமினே.

கவுமாரர்—முருகனடியார்கள்; கடைத்தாயபாங்கு—சீறியபயன் அவன்தாள்பணிவான்—முருகதாசன் என்ற பெயர்சூட்டி அழைப்பது—-ம—தனக்குவலிய எய்திய பெயர் தான் அதைப் பெற விரும்பியதும்—லை என்பதை "ஈங்கு ஏத்தியசீர்" என்பதாலறிவித்தார். 10

(வேறு)

செப்பும் இன்றமிழ்க் கவிதை ஒன்று ஈந்தொரு சிறுகவி அந்நாளில்
வைப்பு மிக்குறு பாலையிற் கொண்டது மேதினி அறியாதோ

கைப்பு றாதஎன் கவிபல வினவியும் கருணை செய்திலை அந்தோ
ஒப்பு ரைக்கரும் சென்னையம் பதிபுரந்(து) ஒளிரும்வேல்
உடையானே.

கவிதை–வெண்பா; பொய்யாமொழிப்புலவர் பாடமாட்டேன் என்பதற்காக வேடவடிவிற் பாலைநிலத்து உச்சிவேளைப்போது முட்டையென்று தன்பெயரிற் பாடக்கேட்டு, அதிற்பிழைகூறி தான் அவர் மீது வெண்பாப் பாடி ஆட்கொண்டது. விவரம் புலவர் புராணம்–பொய்யாமொழிப்புலவர் சுருக்கம். 11

உடைய நின்னருட் சீர்சிறி தெய்தியும் உலக வாசனை யென்னும்
நடையி னூடுழன் றிடுவது முறையல; நவின்ற வா(று) இனித்
தாள்வாய் அடைய லர்க்கெம னாங்கதிர் வேற்படை அண்ணலே!
அடியாருள் இடைய றாதொளிர் சோதியே! சென்னையில் என்னையும்
விழைவானே!.

அடையலர்–பகைவர் 12

விழையும் என்மனம் ஆதியும் கவர்ந்துநீ விளங்குமா(று) உணரார்போல்
தழையும் வல்வினைச் சழக்கினுட் புக்குறத் தக்கதோர் பணியீந்தாய்
பழைய தொண்டனென்(று) உரைத்தது மெய்மை பழுதுகொல்
அறிகில்லேன்
மழைகு லாம்பொழிற் சென்னையில் வன்னமா மயில்மிசை
வருவானே.

பணி–தொண்டு அதுபாடும் பணி; மழை–மேகம் 13

வான நாடரும் மண்டலத் தினர்களும் மற்றைய உலகோரும்
ஈன மார்புற நெறியினிற் சேரினும் யான்உனை மறவேன்நின்
மான வேற்படைப் பூசையும் நீறணி வண்மையும் வழுவேன் காண்
தேன றாமலர்க் கடம்பணி வாய்திருச் சென்னையிற் றிகழ்சேயே: 14

சேய வாரணக் கொடியுடைக் குமரனைத் திருப்புகழ் பலபாடும்
வாய பைங்கிளிக்(கு) உரியனைச் சென்னையில் வழுத்தும்நா
வலர்தம்பால்

தூய தாமரை யாளெனச் செந்நிறம் துலங்குமுண் டகப்பாவை
மேய நாள்வரின் அல்லதென் றன்மனம் சிகசித மருவாதே!

வாரணக்கொடி–சேவற்கொடி; பைங்கிளி–
அருணகிரிநாதராணகிளி 15

மருவ றாக்குழ லியர் இளமுலைதரு மயல்முதற் பலநீங்கும்
ஒருவு மெய்யருட் போதம்வந் துறுமுனம் உற்றவர் என்பாடற்(கு)
அருவ வறுக்குமென் நெஞ்சகத் துன்றிரு அடிச்சுவ டுறல் பொய்யோ
திருநி லாவிய சென்னையம் பதிபுகழ் செஞ்சுடர் வேலானே.

மருஅரு–மணம் மாறாத; போதம்–ஞானம்; ஒருவுதல்–நீங்குதல் 16

வேலை யாதிய புனலினும் கனலினும் விடுத்தஎன் தமிழ்ச் செஞ்சொல்
மாலை யாவையும் விரும்புமா(று) உதவும் வல்லையென்
றுணர்வேனை
ஓலைதோய் கரத்து எமன்விடும் தூதர்வந்து உறுக்கும்நாள்
வருத்தாதே
சேலை நேர்விழிச் சிறுமியர் நடம்பயில் சென்னையிற் செய வேளே!

வேலை–கடல்; வல்லை–வல்லவன்; வருத்தாதே–வருமாறு
செய்யாதே என்பதாம்; வருவித்தல் என்பதை வருத்தல்
என்பது பாண்டி நாட்டு வழக்கு. 17

வேளை கண்டருள் செயவலாய் எனமிக விரும்புமென் னிடைதோன்றி
நாளை என்றசொல் பகர்ந்தும்நாட் கழிந்தன நானிலத் துழல்கின்றேன்
ஆளை யிவ்வணம் அலக்கழித் திடல்உனது அருளினுக் கழகேயோ
வாளை பாய்புனற் கழனியாஞ் சென்னையில் மருவிய முருகோனே.

நாளைக்கு அருள்வேன் என்ற முருகன் கூறிய அனுபவம்
ஆணை–உன்னையே நம்பியுள்ள அடியேனை; அலக்கழித்தல்
காலங்கடத்தி வருத்துவது. வாளை–ஒருவகை மீன். 18

முருகு வான்மலர் கொணர்தரச் சென்றவன் மூரியாக் கையை
அன்றுஓர்
அருகன் அங்கியில் இடும்படி கண்டனை அதுநினைத்

தயர்கின்றேன் திருகு கார்மருப்(பு) ஆடுஉகைத் தருந்தவர் தியக்கறச்
செயல்பொய்யோ
பெருகு வார்கடல் சென்னையைச் செங்கைவேல் பிடித்துநின்
றளிப்போனே.

அருந்தவர்–நாரதாதி முனிவரவர் 19

அளிக்கு ழாம்முரல் கடம்புறழ் பனுவல்ஒன்(று)
அணி அந் தணன்றன்னைத்
தெளிக்கு மாறுசெய் திருவிளை யாடலைத் தினம்நினைத்
தயர்கின்றேன்
களிக்கும் இன்சுவைக் கவிதை ஒன் றேனும் யான் கழறிடும்
இவற்றினறோ
பளிக்கு மேடையில் மதிதவழ் சென்னையம் பதிக்குரு
பரவேளே.

அளிக்குழாம்–வண்டுக்கூட்டம்; முரல்–ஒலிக்கின்ற; அந்தணன்–திருஞான சம்பந்தர்; (8ம்) பாட்டு தோறும் இவரைக் கூறுவது மரபு முருகன் பதிகத்தில்; பளிக்குமேடை–பளிங்குகற்கள் பதித்த மாடிவீடு; இன்று பீங்கான் பதிக்கப்படுகிறது; மதிதவழ்–சந்திரன் தங்குமளவு உயர்ந்த கட்டிடங்களுள்ள சென்னை. 20

(வேறு)

பரவைநெஞ் சுவப்ப வேண்டும் பாவலவன் றனக்குப் பேறும்
தரவலான் மகவாம் நீஎன் தமிழினுக் கிரங்கொண் ணாதோ
இரவலர் வருத்தம் தேரா(து) யாவையும் அறிந்துற் றாயோ
கரவினர் மருவாச் சென்னைக் கந்தனாம் கருணை வாழ்வே!

பாவலன்–சுந்தரமூர்த்தி; கரவினர்–உள்ளதை மறையாதவர். 21

கருணைஓர் சிறுது மில்லாக் கடைத்தலை வாயில்தோறும்
தெருமரல் ஒழுக்கி னன்றிச் சிறிதும்உள் மகிழேன் கண்டாய்
அருணையின் கிளியென் றென்னை அறைந்தமை மறைந்திட் டாயோ
திருமரு மார்பன் போற்றச் சென்னையிற் றிகழ்வே லோனே!

கடைத்தலை–தலைவாசல்; தெருமரல்–துன்புறுதல்; கிளி–முற்பிறவியில் தன்னை அருணகிரி யென்ற முருகன். 22

வேலனைச் சென்னை மூதூர் விகிர்தனை விரும்பும் நெஞ்சில்
காலனை யனைய கண்ணார் கனிமொழித் துவர்வாய் ஆதிக்
கோலமும் இலங்கக் கண்டு குலைவதென் றொழிவேன் அந்தோ
பாலறா வாயன் போல்வார் பதத்துகள் சுமக்கின் றோரரோ.

மூதூர்–பழமையான நகரம்; பாலறாவாயன்–திருஞானசம்பந்தர் 23

ஓரமுன் உளத்தி லுண்டேல் ஒருகணத் தினும்உன் னாதான்
சீரவிர் அருணைக் கோயிற் சிகரியில் விழும்அன்(று) ஆண்டாய்
வாரம்வைத் தெனக்கந் நாள்அம் மலையில்அவ் வளவேசெய்தாய்
கூரவேல் முருக வேளே குளிர்பொழிற் சென்னை யானே.

ஓரம்–ஒருதலைப்படசம்; அருணகிரிநாதர் கோபுரத் தேறி விழும் அருவரை முருகனை எண்ணியதில்லை; அப்படிஇருக்க விழுந்த போது உடன் தோன்றி அருள் செய்தாய் ; அடியேன் இளம் பருவ முதல் வழிபாடு செபம், தியானம்ட செய்து உன்னைக் கண்ணாற் காண விரும்பி, திருமலையினின்னிறு உருண்டு உயிர்விட முயன்றேன். நேரிற் காட்சி தந்தருளாமல் உடலை மட்டும் சிதையாதபடி ஆட்கொண்டாய். இதனால், ஓரம் உன்னிடம் உள்ளதே என்று எண்ணலாகிறதென்பதாம்; வாரம்–உள்ளன்பு. 24

சென்னையம் பதியி லுற்றுச் சிறியனேன் தொடுக்கும் பாடல்
தன்னைமிக் கணியும் வேலா சரதம்ஒன் றுரைக்கக் கேண்மோ
உன்னைநான் விரும்பு மாறிங்(கு) ஒருசிலர் எனைவேட் டுள்ளார்
என்னைஆள் வதன்முன் அன்னார்க் கினியபே றருள்செய் வாயே

சரதம்–உண்மையுானது; உன்னை அடியேனேன் தலைவனாக எண்ணி வழிபடுகிறேன் ; அதுபோல என்னை முதலாக வைத்து வழிபாடு செய்பவருள்ளார். என்றனுக்குத் தாமதமாக அருளினாலும், அவர்கட்கு வேண்டிய பயனை உடன் தந்தருள வேண்டும் என்பதால், தன்னலத்தை விட பிறர் நலத்தையே வேண்டி சுவாமிகள் மனதையறிய இடந்தருகிறது. இக்கவி. 25

வாயசத் துருவும் எய்தி மகபதிக் கருள்வான் றன்பின்
மேயநீ யெனையிவ் வாறு வெருட்டிடல் முறையாங் கொல்லோ
நீயநான் அறைந்த மாற்றம் நிசப்படப் புரிந்தால் போதும்
சேயசண் முகத்(து) ஓர் குன்றிற் சென்னையிற் றிகழ்கின் றோனே!

வாயசம்–காகம்; அருளியவர் கணபதி; மாற்றம்–அருளுரை 26

திகழ்கதிர் வடிவே லேந்திச் சிகிமிசை ஒருகால் வந்து
புகழ்பட வாழ்வார் பல்லோர் போற்றிடும் பொதுச்சீர் நல்கி
இகழ்வொருங் கொழிப்ப(து) என்றென்று ஏங்குவ தறியாய் கொல்லோ
அகழ்கடற் சென்னை மூதூர் அறியநின் றாடு வானே. 27

ஆடுறும் மயிலும் வேலும் அருந்துணை யெனப்பல் பாடல்
பாடுறும் அவரோ(டு) யானும் படியிடத் தொளிரச் செய்வாய்
காடுறும் குறத்தி மோகக் கள்வனென் றிறைஞ்சு வாரை
நாடுறும் குமரா சென்னை நகரிடை நடிக்கின் றோனே. 28

நடித்தபாண் டரங்கப்பெம்மான் நால்வருக் கருளும் பேறும்
படித்தசொற்புலவர்க் காகப் பருப்பதக் குகையை நின்வேல்
இடித்ததும் கருதி நொந்தேன் இன்பமுற் றிடும்நா ளென்றோ
வடித்தமுத் தமிழ்சேர் சென்னை மாநகர்க் குமர வேளே.

பாண்டரங்கம்–சிவன் ஆடும் கூத்தின் பெயர்; புலவன்–நக்கீரன் 29

குமரநா யகனே சென்னைக் கோயிலிற் குடிகொள் வானே
அமரர்சே கரனே என்கைக்(கு) ஆசைமிக் குறும்என் றன்னைத்
தமரவர் அனையார் சேனைச் சரிதமும் சழக்கும் தாழாச்
சமரசம் பகரென்றோதித் தகைவதோர் சளமா மன்றே.

தமரவர்அனையார்–தம்மை ஒத்த அன்பரது; சரிதம்–வழக்கு
வெற்றி முதலியவை; தகைவது–கட்டுப்படுத்தியது;
சளம்–துன்பம். 30

(வேறு)

சளமெ லாங்கெடும் தவப்பய னாலெனச் சாற்றும்
அளவில் பேரருட் சித்தியு முத்தியும் அமையும்
இளமை நீங்கரும் குமரனைச் சென்னையி னிடைகண்(டு)
உளமும் நெஞ்சமும் உருகிடத் துதிக்குஉத் தமரே. 31

உத்தத மத்து உயர் பத்தியைப் பழுதென உரைத்துப்
பித்த ராமெனப் பலவிதம் பிதற்றுநர்க்(கு) ஒல்கும்

சித்தம் உன்னருட் டிவலைதோய்ந்து உய்வுறச் செய்சீர்
முத்தார் சூழ்தரச் சென்னையில் மருவுசண் முகனே. 32

முகப டாம் அணி மால்களி றளித்தவன் முனைச்சீர்
நிகழும் தோட்டிநல் காமையில் துயர்செயல் நெறியோ
சகல ஞாயமும் நீயறிவாய் எனல் தவறோ
மகர நீரோலிச் சென்னையில் மயிலுகைப் பவனே.

முகபடாம்—யானை நெற்றியிலணிவது. யானையைக் கொடுத்தவன் ஒருவன். அதை யடக்கி ஆள்வதற்கான தொறட்டி (அங்குசம்) தராதது போல அரிய பேறு பலவற்றை எளிதிலளித்தனை, ஆனால் சிறிய தகுதியுள்ள பொருள்தராதபடி துன்புறுத்துகின்றனையே என்பதாம்.

ஆசிரிய சுவாமிகள் கையில் பொருள் கிடைப்பின் தமது வேற்பூசையிலேயே செலவழிப்பார். கடன் பெற்றும் செய்வார். 'பூசை செய்யும் பேராசை' என்பார் மற்றும் ஒரு நூலில், 'பொன் அனைத்தையும் நான் போற்றி வைத்தில்லேன் போற்றிடும் அடியவர்கரும் அன்னமும், துகிலும் அளித்திட்டேன்' என்பதால் அறியலாம்.

மகரநீர்—கடல்; உகைத்ததல்—செலுத்துதல் 33

பவள மால்வரை யாமெனப் பசுமயில் மேடம்
கவள வாரணம் எனுமிவற் றொன்றினிற் கவின்றுஆள்
தவள நீற்றணிச் சங்கரன் தழல்விழித் தனையா
குவளை நீர்வயற் சென்னையிற் குலவிய குகனே!

மேடம்—ஆட்டுக்கடா; தவள—வெண்ணிறமான; குவளை—நீலோற்பலப்பூ; கவளம்—யானைக்கிடும் உணவு; பவளமால்வரை—சிவந்தமலை; முருகப்பெருமானுக்கு மயில், ஆடு, யானை என்ற மூன்றும் வாகனம். 34

குகனைக் குன்றமும் குறிச்சியும் சென்னைமுற் கூறும்
நகரும் வைகிய நாதனை நறுந்தமிழ்க் கவியால்
பகர வல்லவர் யாவரா யினும் அவர் பதப்பூந்
துகள்என் சென்னியிற் புனைவது சரதமாம் துணிவே. 35

துணியில் லாதுபைத் தழையுடுத் தவளெதிர் தோன்றிக்
கணியும் ஆனவன் கடையனேன் தொடுக்கும்வெண் கவிதை
அணிவ தோர்வியப்(பு) அன்றெனத் தேறுமின் அளவில்
பணிலம் ஊர்புனற் சென்னையிற் குலவுபா வலரே.

தழை உடுத்தவன்–வள்ளி நாயகி; கணி–வேங்கைமரம்;
பணிலம்–சங்குகள்; வியப்பன்று என்பதால் எளிது என்பதைக்
குறிக்கும். 36

பாவ லார்க்கொரு தலைவனைச் சென்னையம் பதியில்
மூவ லார்புக ழத்தகு குமரனை, முட்டையென் றுரைத்த
நாவ லானிலும் நான்இநாள் இழிந்தமை நவிலிற்
காவ லாரியர் பலரழத் தகுகடுந் துயரே.

மூவலார்–பிரமன், திருமால், உருத்திரன்; நாவலார்–
பொய்யாமொழிப்புலவர்; கா–கற்பகத் தருவிலுள்ள, வலாரி–
இந்திரன் ஆகியோரும் ருந்துவர் என்பதாம் 37

கடுக்கை வார்சடை பண்ணவன் தன்துதிக் கவிதை
தொடுக்கு மன்பருக்(கு) உதவுமா றெனக்குஅருள் தூய்மை
கொடுக்கில் நின்புகழ் குன்றுமென்(று) ஒல்கினை கொல்லோ
அடுக்க லாமெனச் சென்னையும் புரந்தவே லவனே.

கடுக்கை–கொன்றை; பண்ணவன்–சிவன்; அடுக்கல்–மலைநிலம்.38

அவ்ல நெஞ்சகம் நீயருள் தருதும் என் றறைந்தும்
கவலை வாரியிற் குளிப்பது காண்கிலை கொல்லோ
சவலை யாமெனத் தேம்புமுன் தந்தெனைப் புரப்பாய்
குவல யத்துயர் சென்னையம் பதியின்வேற் கோவே. 39

கோவை யங்கனி அனையவாய் இதழ்உணக் கொடுக்கும்
பாவை மார்மயற் கடலிடை முழுகிய படிறேன்
தேவை யாவைவும் நல்கவும் வல்லையோ தெரியேன்
மாவை வென்றபின் சென்னையில் வந்தவா னவனே.

மாவை–மாமரமான சூரனை. 40

(வேறு)

நவவீ ரரில்நான் ஒருவீ ரனெனப்
புவனா திபரும் புகல்பே றருள்வாய்
சிவபா லக!சென் னையினிற் பரவும்
தவர்நா டியசற் குருதே சிகனே. 41

சிகரந் திகழ்பல் கிரியிற் றிரியும்
குகன்அன் பர்குறிப் பறியா தவனோ
நகரம் பலநண் ணியசென் னையினில்
புகழ்கொண் டொளிர்புண் ணியநா வலரே! 42

நாவற் றியில்நான் மெலியச் செயும்என்
ஆவற் றிரள்என் றழியப் புரிவாய்
சேவற் கொடுசென் னையில்நின்று, அடியார்
ஏவற் றொழில்செய் யும்எழிற் குகனே.

நாக்கு ஈரமற்று வறட்சியுறுமளவு நாவற்றியல் என்றார்.
ஏவல்–அடியவர் விருப்பப்படிச் செய்தல். 43

எழிலித் திரள்நா ணுறும்ஈ கைநலம்
கழிதுற் றகரங் கள்உனக் கிலையோ
அழிவற் றுயர்சென் னையில்அன் பர்கள்தம்
விழிகட் கமுதென் றொளிர்வே லவனே.
கழி–மிகுதி; துற்ற–நெருங்கிய. 44

வேலர் கைவிசா கன்எனத் தினம்நின்(று)
ஓலங் கள்இடும் பயன்உள் ளுடைவோ
ஆலங் கடிதுண் டபிரா னருளால்
சீலங் கமழ்சென் னையில்வந் தவனே. 45

வந்தித் துமனத் திடைஎப் பொழுதும்
சிந்திக் கைதெரிந் தும்இரங் கிலையே
செந்திற் பதிபோ லொளிர்சென் னையினில்
சந்திப் பவர்தம் மையளிப் பவனே. 46

அளிமொய்க் கும்மலர்க் குழலார் உறவால்
எளிமைப் படும்என் னையிகழ்ந் துவிடேல்
கிளிபற் றியகைக் கொடுகே கயமீ(து)
ஒளிர்பொற் பொடுசென் னையிலுற் றவனே.

அளி–தேனீ; கேகயம்–மயில் வாகனம். 47

உற்றா ரெனஊ ரவரொா(டு) உழலப்
பெற்றாய் வுறுபே தமையென் றொழிவேன்
நற்றா ரணிநண் ணியசென் னையில்ஓர்
சிற்றா கரம்எய் தியசே வகனே. 48

சேவே றியசெந் தகையார் புரையும்
தூவே டம்உளா ரிடைதோய் குவனோ
காவே ரிஅளித் தகளிற் றின்இளங்
கோவே குளிர்சென் னையில்வாழ் குருவே. 49

குருவென் றுகுறித் துளகொள் கையினேன்
அருவென் னும்அவர்க்(கு) இடையத் தகுமோ
மருவொன் றுமலர்க் குரவம் புனைவாய்
திருமின் புணர்சென் னையின்மன் னவனே.

குரு–சகனம்; அரு–நிட்களம்; இடைதல்–நெஞ்சயர்தல். 50

(வேறு)

மன்னவர்பற் பலர்போற்ற மகிழ்ச்சியுறு முதுசூரன்
தன்னகலம் கீன்றுவரும் தனிவேலை மறவாநான்
இன்னலுறச் செயலாமோ இகழ்ச்சிஉனக் கிலைகொல்லோ
பொன்னசலத் தினர்பாலா புகழ்ச்சென்னை புரியானே.

அகலம்–மார்பு; கீன்று–பிளந்து; பொன்அகலம்–மேருமலை. 51

யானென்ற ஆணவப்பேய் இருள்நீக்கி யாவையும் நீ
தானென்ற மெய்யுணர்ச்சி தரிலுனக்கோர் குறையுண்டோ
மீனென்ற விழிமாதர் மிகநடிக்கும் வியன்சென்னைக்
கோனென்ற வடிவேலும் கொடுகுலவும் குணக்குன்றே. 52

குன்ற முற்றும் மணக்கின்ற கேகனகத் திருத்தாள்வந்(து)
என்றனது மனத்தூடிங்(கு) இலங்கியதன் பயன்ஈதோ
நன்றறியார் பலர்கூடி நகுந்துயரும் விளைத்தாயே
என்றருள்வாய் சென்னைநக ரிடத்துறையும் இளையோனே. 53

இளங்குரும்பை முலையாரை எண்ணியெண்ணி யீடழிந்து
களங்கமிகு மனப்பேய்நின் கருணை வெள்ளத்(து) அமிழாதோ
விளங்குபல கனவூடு விளம்பியதும் பிழைதானோ
வளங்குலவும் சென்னைநகர் வாழ்வனைய மயிலோனே. 54

மயிலுகைத்து வானவரும் மாதவரும் நனிசூழ
அயிலெடுத்து வரும்சேவை யதைவிரும்பல் அறியாயோ
குயிலனைய குறத்தியொடு கூத்தாடும் குகனேபண்
பயிலுமவ ளிடத்தானே பழஞ்சென்னைப் பதியானே! 55

பதிகம் ஒவ்வொன் றனுக்கும் பரிசளித்த பரமன்றான்
விதிவழிநல் கியசேயாய்வி ளங்கியநீ மிகையாய
துதிபுகலும் எனையேன்நின் தொழும்பரிற்கூட் டிலைஅந்தோ
அதிர்தொனித்தண் கடற்சென்னைக்(கு) அரசான அயில்வேளே.56

அயில்வேலும் வச்சிரமும் அடற்சூலப் படைஒன்றும்
கையிலேந்தி நின்றநிலை கருதார்க்கும் கதியுண்டோ
மயிலேறும் பெருமானே வாரணப்புட் கொடியானே
பயில்வேதம் மலிசென்னைப் பதிபுரக்கும் பண்ணவனே. 57

பண்ணமைந்த நான்மறைமேற் பழிகூறிப் பாவவினை
நண்ணலுற்றார் சிலர்தம்பால் நான்பகைத்த தறியாயோ
எண்ணம்ஒத் தருள்செய்வாய் எனக்கும்ஒரு செயலுண்டோ
புண்ணருந்தார் வளர்சென்னைப் புரிக்குமரப் புத்தேளே!

பழி–வேள்வியிற் கொலை செய்தல்; அவ்வேள்வியும் கொலை
புரிதல் ஒப்பவில்லை; இடையிற் சேர்க்கப்பட்டது என்பதாகும்.
புண்– ஊன். 58

புத்தேளிர் பெருவாழ்வும் பொய்மையெனத் தெளிந்ததற்பின்
இத்தேயத் தினர்தம்பால் யான்பொருள்வேட் டிடலழகோ
முத்தேஒத் தொளிரும்நகை முகுடர்மகட்(கு) இனியானே
சித்தேறச் செயும்வேலா சென்னைநகர் புரப்போனே! 59

புரந்தர னா தியர்தமையும் பொருட்படுத்தற் கிசையாநான்
இரந்தலையுந் தொழிலொன்றால் இழிந்தவிதம் உணராயோ
கரந்தமொழி பலபேசிக் கடைத்தெருவில் இழுத்தாயே
பரந்தபெரும் புகழ்ச்சென்னைப் பதிமுருகப் பெருமானே!

புரந்தரன்–இந்திரன்; கரந்த மொழி–மாறுபட்ட சொற்கள் கடைதெரு–நகரத்து வீதி; இழுத்தல்–தன்னை வரும்படி யழைத்தது. 60

(வேறு)

மானீன்ற மகள்தந்த மயல்மிஞ்சு குகனங்கை வடிவேலையே
நானீண்டு கருதித்து திக்கின்ற தெளிதென்று நவிலன் மினோ
தேனீந்த மலர்சிந்து பொழிலோடு சிலவாவி பொலிசென்னையூர்
போனீண்ட புகழ்கொண்டு தமிழ்வாரி அமுதுண்ட புலவோர்களே.61

புலமைத்தி றன்சற்றும் அறியார்தம் மனைவாயில் புகவிட்டிடா(து)
இலகுற்ற தோகைக் குடைக்காண மயில்மீதென் எதிர்மன்னுவாய்
திலகத்து அரைச்சந்தி ரன்போலும் நுதல்கொண்ட தெய்வானைதன்
நலவுத் தொழிற்கஞ்சு வாய்அன்பர் மலிசென்னை நகர்நாதனே.

திலகத்து–பொட்டிட்ட தாய்; பாதி நிலாப்போன்ற நெற்றி உள்ளவள் தெய்வயானை ; நுதல்–நெற்றி; நலவு–நன்மை; ஊடலின் பொருளைக் குறிக்கும். 'ஊடுதல் காமத்திற்கின்பம்' என்றதாலாறியலாம். 62

நாதத்தி னுக்கப்பு றத்தாடல் செயும்என்றன் நளினப்பதம்
போதக்க ருத்தூடு திகழ்வுற்றும் இவ்வாறு புலர்வெய்தினேனே
நீ தத்தி னுக்கொத்த படியிங்கொர் அடையாளர் நீநல்குவாய்
சீதப்பு னற்சென்னை நகர்வேலனேஒப்பில் செயவீரனே.

போதக் கருத்தூடு–போத, மிகுதியாக–ஞானமிக்க என்று இருபொருள். 63

வீராதி வீரர்க்கும் இசையாத பேராசை விளைவித்தநீ
ஆராத னத்துக்கும் இடையூறு புரிதன்மை அறிகின்றிலேன்
காரானை நிகர்மேதி யுடையானும் வருமாறு கைவிட்டிடேல்
சீராயி ரங்கொண்டு மிளிர்சென்னை நகரூடு திகழ்கந்தனே.

ஆராதனம்–வழிபாடு; இடையூறு–தாராளமாகச் செலவிட முடியாதபடியான பற்றாக்குறை. அடிகட்குச் சிறப்பு வழிபாடு புரிவதிற் பேராவலுண்டு. 64

கந்தக் கடம்பன்ன தமிழ்மாலை பலவாறு கழறுற்றும் நான்
இந்தக் கொடுந்துன்பம் உறுமாறு செயல்நன்மை யெனலாகுமோ
மந்தக் கருத்தர்க்கும் அருள்செய்த திருவுள்ள மறைவுற்றதோ
சந்தக் கடற்சென்னை நகர்வாழ்வு பெற வந்த தனிவேலனே.

கந்தம்–மணம்; கடம்பு–முருகனுக்குகந்த மலர். தமிழ் அது போல்வது என்பது சிறப்பு. 65

தனியாகும் உனையன்றி மறுதெய்வம் இலையென்றசரதம்சொனாய்
நனிநாடி மெலிகின்ற நிலைகண்டும் உணாரில் நலியச்செய்தாய்
இனியாரொடு இதைவிண்டு குறைதீர்வன் மயிலேறி எதிர்வந்திடாய்
அனியாயம்அறுசென்னை நகர்வாழ் விளையாடும் அருளாளனே.66

அருள்வாரி யிடையண்ட ரொடுதொண்டர் பெறவந்த அமுதாகும்நீ
இருளூடு கிறிபோலு மொழிபேசல் இயல்பாகும் எனலாகுமோ
தெருள்மோன முடனுன்றன் அடியார்கள் உறுமாறு சிறிதோதுவாய்
வெருள் நாக மயில்மாவின் மிசைசென்னை நகர்சூழும் விதிர்வேனே.

கிறி–பரிகாசம்; மயில்மா–மயிலாகிற குதிரை; கலபத்து ஏர்மா (கந்தரநுபூதி) 67

விதிபட்ட தளைவிட்டு விடெனச்சொல் அரனுக்கும் வியன்மிக்கதென்
பொதியைக்குள் முனிவற்கும் நுவல்ஒப்பில் நிலையிச்சை
புகஉய்த்ததுஆர்?
மதிபற்றும் உயர்வுற்ற தெனல்மெய்ச்சொல் இயல்நட்பு
மலிசென்னையாய்
நிதிபெற்ற மகவொத்து வருசத்தி முருகப்ப நமதண்ணலே.

விதி–பிரமன்; முனிவன்–அகத்தியர். மதிபற்றும்–சந்திரன் தங்கும்படி வளர்ந்தது என்று சொல்லக் கூடிய பொழில் கோயில்மதில் ஆகியவை. நதி–கங்கை, வளர்த்த மகன் என்பது உட் கருத்து. 68

நமனஞ்ச முனிகின்ற பதநம்பர் விழியங்கி நடுகின்றஓர்
குமரன்ப னிருதிண்கை பெறுகந்தன் வளமிஞ்சு குளர்சென்னையான்
இமமொன்று கிரிதந்த மகள்கொங்கை அமுதுண்ட எழில்வண்ணவாய்
அமலங்கொள் கிளியென்றும் எனுள்வந்து தினம்வம்பில்
அறைகின்றதே.

நம்பர்–சிவபிரான்; இமம்–பனி; கிரி–இமயமலை. 69

அறையாத மொழிகோடி சொலஎன்னுள் வரும்நீஇவ்அகிலத்தினோர்
நிறைசீலன் எனுமாறு செயும்வண்ணம் ஒருசற்றும் நினைகின்றிலாய்
பிறைசூடி வழிபாடு கொளும்ஞான குருஎன்கை பிழையாகுமோ
மறைஓல மலிசென்னை நகரூடு தகர்மீது வருதெய்வமே.

அறையாத மொழி–இரகசியமான கருத்துகள்; ஓலம்–ஓசை. 70

(வேறு)

தெய்வத் திருவருள் வண்மைப் புலவோர் செல்வத் தினைமிக
நண்ணித் தமியேன்
நைவுற் றுழல்வது கண்ணுற் றிலையோ நல்கிற் பகைதவிர்
சொன்மிக் குறுவேன்
எய்விற் சமர்பொரு சிம்மத் தினைஓர் எஃகுப் படைகொடு முன்
அட்டுயர்வாய்
கைதைப் பொழில்மலி சென்னைக் குமரா கள்ளக் குறவரும்
உள்ளற் புதனே.

புலவோர் செல்வம்–சொற்பலிதப் பேறு. கண்ணுறுதல்–
கருதுதல். சொல்–பெரும்புகழ்ச்சி; எயிவில்–ஏவும் கணை;
சிம்மம்–சிங்கமுகன் ஓர் எஃகுப்படை–வச்சிராயுதம்;
கைதை–தாழம்பூ இது நெய்தல் நிலக் கருப்பொருள்;
நெய்தல்–கடலும் கடல் சூழ்ந்த இடமும் ஆகும். 71

அற்புதம் நீடிய சென்னையின் முருகோன் அப்படி ஓர்விசை என்னிடை
வரும்நாள்
முற்பவம் ஓதிடல் உண்மையது அலவேல் முத்தியும் வீணென
உன்னுதல் பிழையோ
புற்புத மேநிகர் கொம்மைய முலைதோய் பொற்பொடு நான்முகன்
நண்ணவெ(ண்)ணிறமார்
நற்பது மாதனம் மன்னிய கொடியே நத்தணி காதினர் பின்வரு பிடியே.

அப்படி–பலதரம் காட்சி தந்தது போல ஒரு தடவை. முற்பவம்–முற்பிறப்பு; அலவேல்–உண்மையன்றானால். வீடுபேறு ஒன்றுண்டென்பது நிசமன்றென்பதில் தவறுண்டா : என்று

எதிர்மறையாக வினாவி இன்றென்பதை விளக்கினால். புற்புதம்–நீர்க்குமிழி கொடி–கலைமகள்; நத்து–சங்கக் குழையுடையவர் சிவபிரான் 'அவர்பின்வரு' என்றது அவர்தங்கை என்ற பொருளில் அமைகிறது. விவரமாவது : ஆதிபராசத்தி–வெண்மை–பச்சை–பொன் என்ற மூன்று முட்டைகள் பெளிப்பமுத்தினள். ஒவ்வொன்றிலும் ஆண் பெண்ணான உருவுண்டாயின; திருமால் பொன்னிறத் திருமகனையும், பிரமன் வெண்ணிறக் கலைமகளையும், சிவன் பச்சைநிற உமையவளையும் ஏற்றனர். எனவே, வெண்ணிற முட்டையிற் சிவனுடன் தோன்றியவள் கலைமகள் ஆகவே 'நத்தணி காதினன் பின்வரு பிடியே' எனக் கூறினார். 72

பிடிநிகர் மங்கையர் தம்மய லாலே பிழைபடும் நெஞ்சிறும்
நின்னரு பூநேர்
அடிபதி யுந்தடம் மின்னியும் நீயேன் அருள்புரி கின்றிலை
கண்ணெதிர்வாராய்
தடிகொடு வெண்பொடி யின்முழு கார்வா சரவண சம்பவ
சண்முகநாதா
கொடிவள மிஞ்சிய சென்னைவி சாகா குமரனெ னும்பரு வம்மக
லானே. 73

ஆனிவர் தந்தைமுன் நன்னெறி ஓரா(து) ஆனைமு கன்செயல்
நண்ணிய தால் நீ
தானிய லுஞ்சினம் என்னுள்வ ராதோ தாரக விஞ்சையின்
உண்மையை ஓதாய்
ஊனிணம் உண்பவர் இன்மை அவாவாரொடுமொ ழிந்துள
நின்னியல் போர் வேன்
மேனிலை யின்திரு விண்ணவர் ஊர்போல் வீறுபொ ருந்திய
சென்னையில் வேளே.

ஆன்–அடபவாகனம்; ஆனைமுகன் செயல்–தாய்தந்தை யாரைச் சுற்றிவந்து கனி பெற்றது; ஊன் நிணம்–மாமிசன் உண்ணுவதை இல்லாத கருணைப் பேராவலுள்ள நின் அடியவருடன் நீ கூறிய உண்மையறிவேன். 74

வேளுக் குயர்எழில் மன்னலள ணாதோர் வேடச் சிறுமகள்
தன்னெதிர் வீழ்நீ
தாளுக்கு அரன்அரி முன்னுவல் வானோர் தாமிக் குருகிய
தன்மையை நாடாது

ஆளுட் கழிறும் என்முனம் நேர்வாய் ஆகிற் பிழைவரும் என்னஉ
னாதே
தோளுக் கயிலணி சென்னை வினோதா சூதத் தகுவனை
வெல்முரு கோனே.

தாளுக்கு–உமது திருவடியைப் பெறுதற்று. ஆளுட்கழிவிலும்
அடியவர்களில் கடைப்பட்டவனான;
சூதத்தகுவன்–மாமரமான சூரன். 75

முருகா ! குரவலர் பன்னிரு புயமேல் மொழிமா லிகைபல பன்னிய
கிளியா
ஒருகால் உறல்நிசம் என்னில் என் விழி நேர் ஒளிர் வேல் கொடு மயி
லின் மிசைவருவாய்
அருகா தியர்பலர் தம்பிகள் தடையோ அவர்வேர் களைதர முன்வரல்
கதையோ
குருகான் மலர்சொரி புன்னையின் அருகே குடவால் வளைமுரல்
சென்னையின் அரசே.

மொழி மாலிகை–பாமாலை; ஒருகால்–முற்பிறவியில்
கான்மலர்–மணமுள்ள புன்னப்பூ; குட–வளைவான
வால்வளை–வெண்சங்கு. 76

அரசர்க் கன்புசெய் தன்மையர் நாயேன் அடிமைப் பண்பினை
இன்னமீள னாதோ
சரணக் கஞ்சம் தென்முடி மீதே தறுகத் தந்தருள் பொன்மய
லார்போல்
இரவுற் றிங்குழல் புன்மைய னானேன் இவினப் பஞ்சிறி
துன்னைஅ டாதோ
மரமொத் தங்கொரு கன்னிமுன் நீள்வாய் வளமிக் கொன்றிய
சென்னையி னானே.77

நானெனும் ஓர்பொருள் உண்மைய தெனிலோ நான்மறை நீநிறை(வு)
என்னல்பொ யலவோ
ஏனெனை வீணினில் இன்னலின் விடேல், ஏ தேனுமோர் ஆடல் செ
யின்மகிழ் வடைவேன்

ஊனெனும் ஆகமும் உன்னது வடிவாம் ஓகையை நாடினன்
இன்னதுய் உனதே
தேனென வேமொழி சொன்மற மகள்சேர் சேவக னேஉயர்
சென்னையின் இறையே!
நாள்–தற்போதம்; ஆகம்–உடல்; ஓகை–உவகை. 78

இறையவன் முயல்பல புண்ணிய வடிவாய் இலகிடும் உனைநனி
எண்ணியும் அடியேன்
நறைமலி குழலியர் தம்முலை மயலால் நலிவது முறையல நன்னல
மருள்வாய்
கறைதவிர் பரகதி யின்முழு முதலே கரிமுகம் உடையவர் பின்வரு
முருகா
தறை புகழ் வளமுறு சென்னையின் அதிபா சமரச நிலைதரு சண்முக
மணியே.
நறை–தேனையுடைய பூவணிந்த; குறை–குற்றம். 79

சண்முக மன்னிய நின்னருள் எண்ணார் தம்மெதிர் என்மிடி
சொன்மடம் உன்னா(து)
உண்முக நன்மல ரின்மிசை பொன்வேல் ஒண்மயில் பன்னியர்
துன்னுற நண்ணாய்
விண்முகம் அண்ணிய விண்ணவர் கண்ணே மின்னிடை
அம்மைசெய் புண்ணிய முன்னே
திண்முக வண்மலி பன்மலை அன்னே சென்னையில் என்மொழி
கொண்முதல் மன்னே.
சொல் மடம்–அறியாமையாற் சொல்கின்ற 80

**(வேறு)**

மன்னுதமிழ்க் குறுமுனிவன் வதிதருபே ரயிலிடைபோய் வணங்கி
நாயேன்
உன்னும்நினை வத்த னையும் உரையாடித் திரும்பும்நலம் உதவ
வேண்டும்
என்னும்நினை(வு) எனக்களித்து வளர்ப்பதுநின் அருளன்றோ
இமையார் வாழும்
பொன்னுலக மேயனைய சென்னைநகர புரந்தருளும்
புகழ்வே லானே. 81

வேலைவிடம் அயின்றபிரான் திருக்கோயிற் றடத்தொருகால்
மிதந்து வேப்ப
மாலையுளான் ஒருபுலவன் தனைவணங்கச் செயும்பலகை வழங்கி
ஆண்டு
மேலையுல கினர்தாமும் வியப்புறப் பார்த் திடவேண்டும் வியனார்
செம்பொற்
சேலையணி வாளிருக்கத் தழை புனைவாள் மணம்புணர்ந்த
சென்னை வேளே.

திருக்கோயில்–மதுரை; பலகை–சங்கப்பலகை;
வேப்பமாலையுளான–பாண்டியமன்ன்; சேலையுளாள்–
தெய்வயானை; தழையுடையான்–வள்ளிநாயகி. 82

வேல்வழுத்த மயிலுகைத்து வேலேந்திச் சென்னைநகர் வீதி தோறும்
நாள்வணங்கு வார்விருப்பம் தரவருவான் தனைத்திதுதிக்கும் தன்மை
தோய்ந்தும்
வாள்வனப்புக் கண்ணியர்க்கும் மக்களுக்கும் வேண்டுவன
வழங்கென் பாரோ
கோள்வலிக்கும் அஞ்சாமல் எழுத்தாறும் மொழிந்(து) அவனைக்
குறிக்கின் றோரோ.

வேள்–மன்மதன்; கோள்வலி–நவக்கிரகங்களின் செயல். 83

குறியுரைக்கும் குலப்பேதை கோமானைச் சென்னைநகர் குமர
வேளை மறிய ணிகை யார்பயந்த மணிவிளக்கைக் காண்பதற்கு
வாஞ்சை கொண்டேன்
அறிவிழந்து மனமிழந்து வாக்கிழந்து தேகமும்மற்(று) அவன தாகி
எறிகடற்பா ரினர்இகழ இகத்தலைகின் றேன்உணர்மின்
இயல்வல் லோரே.84

வல்லைநிகர் முலைவனப்புற் றிலகுமொரு வணிகமகள் வாய்கொண்டு
ஓர்பேர்ச்
சொல்லைமட்டும் உரைத்ததனுக்(கு) அத்தனைபே(று) அளித்துளநீ
தொழுதி போற்றிக்
கல்லையொக்கு மனத்தையும்நின் கழற்கணிவேன் றனைப்பெரிது
கவற்ற லாமோ
குல்லைமலர்த் தாரானே குறைதவிர்சீர்ச் சென்னைநகர்க்
குகப்பெம் மானே.

வல்–சொக்கட்டான் காய்; வணிகமகள்–முருகம்மை;
குல்லை–வெட்சி. 85

மானணிந்த கைப்பரமன் தருமகனைச் சென்னைநகர்
வாழ்செவ் வேளை
யானனுகுற் றதும்எனதுள் இச்சையையு மே பெரிதுரைக்கும்
என்வாய் அன்னோன்
நானருளும் பெரும்பேறும் இறுமாப்பும் ஆனந்தத் ததையும் பாடி
மீனவனை யனையார்பற் பலர்புகழத் திகழ்வதென்றோ
வெள்ளை மாதே.

மீனவன்–பாண்டியன் போன் தமிழ் மன்னர். 86

மாதாமுற் பகரும்ஒரு நால்வகையும் ஆகியெனை வளர்க்கின் றானைச்
சேதாம்பற் றடமலியும் சென்னை நகர்க் குகவேளைச் சிந்தி யாமல்
காதார்கட் சிறுமியர்தம் துணை முலைச்சீர் மறவாமற் கருதும் நெஞ்சே
நீதான்என்(று) உனக்குறவாம் பொறிக ளொடென் வசமாவாய்
நிகழ்த்தி டாயே.

நால்வகை–தாய், தந்தை, குரு, தெய்வம் என்பன. சேதாம்பல்–
செவல்லிப்பூ; பொறகள்–மெய், வாய், கண், மூக்கு, செவிகள். 87

நிகளமிடக் கதறியநான் முகத்தொருவன் விதித்தபொறி நீங்கு
மாறுஉன்
அகளபர மானந்தத் திருவடியென் தலைமிசைவைத் தருள
வேண்டும் துகளறுக்க வல்லானே தந்தையைப்போல் புலவன்விடுந்
தூது மானாய்
சகளமுதற் பொருளான சண்முகனே சென்னையினிற்
றழைக்கின் றோனே.

நிகளம்–காலிவிலங்கு; பொறி–விதிப்பயன்; அகளபரமான்ந்தம்–
பெரியதும், பரந்ததுமான இன்பப் பேறு; துகள்–ஆசரபாசம்
புலவன்–கந்தசாமிப் புலவருக்காக ச் சேரனிடம் தூது
போனது சகளம்–உருவம். 88

தழையணிகைச் சாரணரைக் கழுவேற்றல் நிசமாகில் தவள நீற்றைப்
பிழைஎனலு மன்றிஅதன் பிறப்பிடமும் கெடுக்குமவர் பெருக லாமோ

குழைதிகழ்கா(து) ஆறிரண்டில் ஒன்றுகொடென் முறைவினவிற்
குற்றம் உண்டோ?
மலைமலிசீர்ச் சென்னை நகர்த் தெருத்தோறும் பவனிவரும்
வண்மை யானே!

சாரணம்–மயிற்வீலி, தழைகூஷ இவற்றை உடையாய் அணிபவர் பிறப்பிடம்–பசுவினம் ; குழை–குண்டலம், மழை–வீர்வளம் பவனி–வீதிவுலா. 89

வண்ணநறுங் கனிவாய்ப் பைங் கிளியிருந்த புயத்தானை
மயிலூர் வானை
விண்ணவருக் கெளியானைச் சென்னைநகர்க் கோயிலிடை
மேவி னானை
எண்ணவும்மெய் அருட்பெரும்பே(று) இரக்கவும்என் தலையில்விதி
எழுதல் ஓர்ந்தேன்
அண்ணரும்அத் திருவமைந்து களிகூரப் பொறித்துளனோ
அறிகில் லேனே.

வன்ன–சந்தக் கவிகளைப் பாடியதும்; நறுங்கனிவாய்–சிவந்த வாயையுடையதுமான பசுமை நிறக்கிறி (அருணகிரிநாதர், கிளி) 90

(வேறு)

அறியாமை யெனும்பகட்டின் முதுகில் ஏறி ஆணவமாம் கயிறுபற்றி
அதட்டிப் பற்பல்
எறிவேலார் நடுக்குலவும் காலன் என்மேல் எதிராமற் றிருவருட்பேறு
ஈய வேண்டும்
மறியேந்தி னார்நுதற்கட் பொறியாம் மைந்தா மயிலுகைக்கும்
பெருமானே வனசம் பூத்த
பொறிநீங்கா வளங்குலவும் சென்னை மூதூர்ப் புரவலனே
முழங்குதிருப் புகழ்கேட் போனே.

பகடு–ஆண் எருமை; கயிறு பாசம்; மறி–மான்; நுதற்கண்– நெற்றிக்கண்ணனாய்; வனசம்–தாமரை; பொறி–திருமகள். 91

திருப்புகழா தியபனுவல் பலவும் தெண்ணீர்த் திரைகடலும்
பொருநைமுதற் றிகழ்பல் நீரும்
நெருப்பும் எனக்(கு) ஈந்தருளப் பெற்றா லன்றி நீயெனைஆட்
கொண்டவிதம் நிசமாம் கொல்லோ
பொருப்புமு ழுமையுமணக்கும் பதத்தம் மானே புலவர்செயும்
பெருங்கலகம் போக்கி னானே
விருப்புவெறுப் பில்லவருட் குடிகொள் வானே விளங்குதமிழ்ச்
சென்னையில்வாழ் விமல வேளே!

பொருநை–தாமிரபரணியாறு; கடல் முதலிய நீர் நிலைகளில், தீயில் முருகன் மீது ஊடல் காரணமாக இட்டழிக்கப்பட்ட தனது பாடல் ஏழுதிய ஏட்டுசு சுவடிகள் பல. அவை மீளவும் முருகன் தருவதாக அருளினார். அவ்வாறு தர வேண்டும் என்பது குறிப்பு. புலவ– மதுரையில் இருந்த சங்கப் புலவர்கள் அவர்களிடையே விவாதம் எழுந்த போது முருகன் ஊமை மகவாகித் தீர்த்தனர். விவரம் திருவிளையாடற் புராணத்தறிக. 92

விமலமலர்த் திருவடியென் தலைமீ தேற்றி மெய் ஞானத் தோடுசித்தும்
விளக்கி உன்றன்
தமரவரிற் கூட்டுதற்கு நாள்சென் றாலும் சகத்தினர்பொய்
உறவையின்னே தவிர்க்க வேண்டும்
குமரகுரு பரமுருகக் கடவு ளானே கொற்றவைவே லொடுசேவற்
கொடிகொள் வானே
இமயமலைக் கன்னிபயந் தருளும் பாலா இணைதவிர்சீர்ச்
சென்னைநக ரிடத்துள்ளானே.

விமல–தூய்மையான; தமரவர்–அடியவர்களான சுற்றத்தார் அவர்களே உண்மை யன்பினர்; என்ற மட்டில் விடாமல் உலகத்துள்ள உறவினர், நட்பு பொய்யானதே என்பதைத் தெளிவுபடுத்தினர். இதனால் நல்லோரிணக்கம் அமையாவிடினும் தீயோர் நட்பு தவிர்க்கப்பட வேண்டும். 93

உள்ளம்ஒருப் படவுனையே கருதி னாலும்
உடுக்கையிடை யார்பணிகொண்(டு)ஒழுகினாலும்
தள்ளரிய வாறுசில பகர்ந்த பின்னும் தமியனேன் வருந்தவிடல்
தகுங்கொல் கூறாய்
கள்ளமனம் நின்றிருத்தாட் சுவடு தோய்ந்து கவின்றவுண்மை
யாரறிவார் கழறப் போமோ
பள்ளவயல் புனல்குலவு சென்னை மூதூர்ப் பரமகுரு பரமுருகா
பரிந்தாள் வாயே.

உள்ளம் ஒருமைப்பாட்டுடன் தியான சிந்தனையிலிருந்தது-ஒன்று சிறப்பு-மற்றொன்னு உலக மாயாபாசத்திற் பழகியது. இவை இரண்டும் ஒன்றற் கொன்று மாறுபட்டது; மேலும், நீக்கக்கூடாதபடியான சிலவற்றை உன்னிடமே கூறினேன் என்றுதன் அந்தரங்க நிலையை விளக்கியது காண்க. மனதில் இறைவன் திருவடி ஊன்றப் பெற்றதன் பதிவுக்கான உண்மையும் அமைந்திருப்பது புலப்படுத்தினர். இதை உலகர் அறியார். அறியும் படி சொவ்தும் கூடாததாகும். ஏனெனில் மனச் சான்றான அனுபவமேயாகும் திருவருட்பேறு அறிய முடியாத ஒன்றாகும். 94

பரிமுகத்துப் பெண்பேயும் குவடும் கீன்றுஓர் பாவலவன்
துதிபுனைந்த பழைய கீர்த்தி
விரிகடற்பார் உலகுரைக்கக் கேட்டுன் றன்னை மிகத்துதிக்கும்
தமியேனை வெருட்டலாமோ
கரிநிகர்க்கும் மனத்தொருமா னிடனும தீர்க்கும் கலியைஒரு
பொருட்படுத்திக் கலக்க வேண்டா
உரியபல குன்றினமும் அழுக்கா றெய்த உயர்ந்தபுழ்ச்
சென்னையில்வந்துறும்செவ் வேளே.

பரிமுகத்துப் பெண்பேய்-நக்கீரரைச் சிறைசெய்த பேய் 'சங்கராய கற்கிமுகி' என்பர் அருணகிரிநாதர். ஆயிரவரை அடைத்துத் தின்ன முயன்ற பேயையும், மலைக்குகையையும் கிளந்த நின் வேற்படைக் குரிய புகழ் பழமையானது. ஆனால் உலகில்யானை போன்ற ஒரு மனிதனால் தீர்க்கக் கூடியது என் கலிப்பேய் இதனை எண்ணி வருந்த வேண்டாம் என்பது. 95

செவ்வரிக்கட் குஞ்சரித்தாய் மனமும் உன்றன் திருவுளமும் இருந்தபடி
தினைப்பைங் கானத்து
அவ்வனைநெஞ் சமும்,இரங்கா திருக்கு மானால் அடியனேன்
இன்னருட்பே றருமை ஓரா(து)
இவ்வ கிலத் தினரொடுபட் டுழல்வேன் அந்தோ யாவையும்நின்
திருக்கூத்தே எனஒண் ணாதோ
பவ்வநெடுந் திரைமணிமுத் தெறியும் சென்னைப் பதிக்குமரா
விழிக்கடையாற் பார்த்தி டாயே.

அவ்வனை—அந்த அன்னை; பவ்வம்—கடல்;
விழிக்கடை—கடைக்கண். 96

பார்த்தன்அடித் திடற்குவந்து கணைஒன் றீந்தார் பழையதவப்
பெரும்பயனாம் பாலன்நீ என்(று)
ஆர்த்தமறை மொழிபிழையன் றாகில், போற்றி அடிபணியும்
எனக்கிரங்கி அருள்வாய் அன்றோ?
சீர்த்தபுகழ்க் கவுமார சமயத் துண்மைச் சிறியனேன் உளத்துணர்த்தித்
திகழ்வான் ஆரோ?
கார்த்திகையார்க்(கு) அறுமகவாய்க் கவுரிக்(கு) ஒன்றாம் காங்கேயா!
சென்னைநகர்க் கந்த வேளே.

பார்த்தன்—அர்ச்சுனன்; ஆர்த்த—ஆரவாரித்துள்ள கௌமாரசமய
உண்மையை முருகனே தனக்கு விளக்கின் கூறினான் என்பது
வரலாற்றிலறிக; 97

கந்தரத்துக் கறையுடையான் முதலாம் ஆறு கடவுளும்நின்
முகங்களென்றே கருது வேனுக்(கு)
அந்தரத்து வானவரும் புவியி னோரும் அதிசயிக்த் தக்கபயன்
அளிக்கொண் ணாதோ
மந்தரத்துக் கொத்ததிண்டோட் சூர ணாதி வயவேந்தா குலமுழுதும்
மடித்த நின்தோட்
சுந்தரத்துக் கேற்றகவி தொடுத்தி லேனோ துகளறுசீர்ச்
சென்னைநகர்ச் சுகிர்த வாழ்வே !

கந்தரம்—கழுத்து; கறை—நீலகண்டம்; மந்தரம்—பெரியதொரு மலை; முற்வகியில் கௌமார உண்மையைக் குறிப்பாற் கூறி, முற்கவியின் முற்பாதியில் விவரங் கூறினார். 98

வாழ்வனைத்தும் நல்கி அன்பர் நடுவைத் தாலும் மயிலனையார்
தம்மயலால் வருத்தி னாலும்
வீழ்வனைத்தும் புல்குவதுன் அருளென் றோர்ந்து விதமறவா
உணர்ச்சியொன்றும் விளக்க வேண்டும்
தூழ்வனைத்துந் தீர்க்நல்ல பெருமை யானே சரவணத்துற்
பவித்தானே தவத்தோர் உள்ளத்(து)
ஆழ்வனைத்தும் இத்தகைத்தென் றறிவிப் பானே அறமலிசீர்ச்
சென்னையில்வே லணிந்துற் றோனே.

புல்குவது—பொருந்துவது. சரவணம்............ ஆழ்வு—ஆழ்ந்து பதிந்துள்ள உண்மை அறிவு. 99

உற்றவரும் பெற்றவரும் உறவி னோரும் உலகோரும் மற்றுளபல்
உயிர்கள் யாவும்
குற்றமறும் குடைத்திருப்பே ராடற் கேற்ற குலக்கருவி
யினங்களெனக் குறிக்கின் றோர்க்கே
கற்றவர்க்கும் நற்றவர்க்கும் அழுது கெஞ்சிக் கனிவோர்க்கும்
ஆறெழுத்தே கழறு வோர்க்கும்
அற்றம்அறிந் துதவிஎழிற் சென்னை மூதூர் அமருமயிற்
கந்தனுண்மை யருளுண் டாமோ.

குடை—என்பது முருகன் கூத்தின் பெயர்; அற்றம்—சமயம். 100

## முற்றிற்ற பயன்

பத்தர்புகழ் சென்னைப் பதிற்றுப்பத் தந்தாதி
அத்தனையும் நெஞ்சிலமைத் தாதரித் தால்—முத்தமிழும்
செம்பொற் பெருக்கும் திருக்கைவேற் சேவகன் றன்
அம் பொற் பதமுமெய்த லாம்.

## வேலும் மயிலும் துணை.

ஸ்ரீ தேவராய சுவாமிகள் இயற்றிய

# கந்த சஷ்டி கவசம்

## காப்பு

### நேரிசை வெண்பா

துதிப்போர்க்கு வல்வினைபோம்; துன்பம்போம்; நெஞ்சிற்
பதிப்போர்க்குச் செல்வம் – கதித்து ஓங்கும்
நிஷ்டையுங் கைகூடும்; நிமலர்அருள் கந்தர்
சஷ்டி கவசந்த தனை.

### குறள் வெண்பா

அமரர் இடர் தீர அமரம் புரிந்த
குமரன்அடி நெஞ்சே குறி.

## நூல்

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக்கு உதவுஞ் செங்கதிர் வேலோன்;
பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட

மையல் நடஞ்செய்யும் மயில் வாகனனார்
கையில் வேலால் எனைக் காக்கவென்று உவந்து
வர வர வேலாயுதனார் வருக
வரக வருக மயிலோன் வருக

இந்திரன் முதலா எண்திசை போற்ற
மந்திர வடிவேல் வருக
வாசவன் மருகா வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த ஐயா ! வருக
நீறுஇடும் வேலவன் நித்தம் வருக
கிரகிரி மேலவன் சீக்கிரம் வருக

சரவண பவனார் சடுதியில் வருக
ரவண பவச ரரரர ரரர
ரிவண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரவண வீரா ! நமோ நம

நிபவ சரவண நிற நிற நிறென
வசர வணப வருக வருக
அசுரர் குடிகெடுத்த ஐயா ! வருக
என்னை ஆளும் இளையோன் கையில்

பன்னிரண்டு ஆயுதம் பாசாங் குசமும்
பரந்த விழிகள் பன்னிரண்டு இலங்க
விரைந்து எனைக் காக்க வேலான் வருக
ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்

உய்யொளி சௌவும் உயிரையும் கிலியும்
கிலியுஞ் சௌவும் கிளரொளி யையும்
நிலைபெற்று என்முன் நித்தமும் ஒளிரும்
சண்முகன் றீயும் தனி ஒளி யொவ்வும்

குண்டலி யாம் சிவகுகன் தினம் வருக
ஆறுமுகமும் அணிமுடி ஆறும்
நீறு இடும் நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும் பவளச் செவ்வாயும்

நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகு குண்டலமும்
ஆறுஇரு திண்புயத்து அழகிய மார்பில்
பல்பூஷணமும் பதக்கமும் தரித்து

நவமணி பூண்ட நவரத்ன மாலையும்
முப்புரி நூலும் முத்து அணி மார்பும்
செப்பு அழகு உடைய திருவயிறு உந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்

நவரத்னம் பதித்த நற்சீராவும்
இருதொடை அழகும் இணை முழந்தாளும்
திருவடியதனில் சிலம்பொலி முழங்க
செககண செககண செககண செகண

மொகமொக மொகமொக மொகமொக மொகென
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண
ரரரர ரரரர ரரரர ரரர

ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடுடு டுடுடுடு டுடுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன் விந்து

முந்து முந்து முருகவேள் முந்து
எந்தனை யாளும் ஏரகச் செல்வ
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந்து உதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதன் என்று

உன்திரு வடியை உறுதியென் றெண்ணும்
என்தலை வைத்துள் இணையடி காக்க
என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க

அடியேன் வதனம் அழகுவேல் காக்க
பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க
கதிர்வேல் இரண்டு கண்ணினைக் காக்க
விதிசெவி யிரண்டும் வேலவர் காக்க

நாசிகளிரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனை பெருவேல் காக்க
முப்பத்து இருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க

கன்னம் இரண்டும் கதிர்வேல் காக்க
என் இளங் கழுத்தை இனியவேல் காக்க
மார்பை இரத்ன வடிவேல் காக்க
சேர்இள முலைமார் திருவேல் காக்க

வடிவேல் இருதோள் வளம் பெறக் காக்க
பிடரிகள் இரண்டும் பெருவேல் காக்க
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழுபதினாறும் பருவேல் காக்க

வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க
நாண் ஆம் கயிற்றை நல்வேல் காக்க
ஆண் பெண் குறிகளை அயில்வேல் காக்க

பிட்டம் இரண்டும் பெருவேல் காக்க
வட்டக் குதத்தை வடிவேல் காக்க
பணைத்தொடை இரண்டும் பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க

ஐவிரல் அடியினை அருள்வேல் காக்க
கைகளிரண்டும் கருணைவேல் காக்க
முன்கை இரண்டும் முரண்வேல் காக்க
பின்கை இரண்டும் பின்னவள் இருக்க

நாவில் சரஸ்வதி நல் துணையாக
நாபிக் கமலம் நல்வேல் காக்க
**முப்பால்நாடி**யை முனைவேல் காக்க
எப்போதும் எனை எதிர்வேல் காக்க

அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க
வரும்பகல் தன்னில் வச்சிரவேல் காக்க
அரையிருள் தன்னில் அனையவேல் காக்க

ஏமத்தில் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியில் நோக்க

தாக்க தாக்கத் தடையறத் தாக்க
பார்க்க பார்க்க பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை அகல
வல்ல பூதம் வலாட்டிகப் பேய்கள்
அல்லல் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனியும்

---

**முப்பால் நாடி—நாடி மூன்று—வாதம், பித்தம், சிலேஷமம்**

கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரம்ம ராட்ச தரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிகசிகாட் டேரி இத்துன்ப சேனையும்

எல்லிலும் இருட்டிலும் எதிர்படும் அண்ணரும்
கனபூசை கொள்ளும் காளியோடு அனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக்காரரும் சண்டா ளர்களும்

என்பெயர் சொல்லவும் இடிவிழுந்து ஓடிட
ஆனை அடியினில் அரும்பா வைகளும்
பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்
நகமும் மயிரும் நீண்டமுடி மண்டையும்

பாவைகள் உடனே பலகல சத்துடன்
மனையில் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டியப் பாவையும் ஒட்டியச் செருக்கும்
காசும் பணமும் காவுடன் சோறும்

ஓதும் அஞ்சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றார் வஞ்சகர் வந்து வணங்கிட
கால தூதாள் எனைக் கண்டால் கலங்கிட

அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட்டு அலறி மதிகெட்டு ஓடப்
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுடல் அங்கம் கதறிடக் கட்டு
கட்டி உருட்டு கால்கை முறியக்

கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு விழிகள் பிதிங்க
செக்கு செக்குச் செதில் செதிலாக
சொக்கு சொக்குச் சூர்ப்பகைச் சொக்கு

குத்து குத்து கூர்வடி வேலால்
பற்று பற்று பகலவன் தணல்எரி
தணல்எரி தணல்எரி தணல் அது ஆக
விடுவிடு வேலை வெருண்டது ஓடப்

புலியும் நரிவயப் போத்தொடு நாயும்
எலியும் கரடியும் இனித் தொடர்ந்து ஓடத்
தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விஷங்கள் கடித்து உயிர் அங்கம்

ஏறிய விஷங்கள் எளிதுடன் இறங்க
ஒளிப்புஞ் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதஞ் சயித்தியம் வலிப்புப் பித்தம்
சூலைசயங் குன்மம் சொக்குச் சிரங்கு

குடைச்சல் சிலந்தி குடல்விப்புரிதி
பக்கப் பிளவை படர் தொடை வாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத்து அறணை பரவரை யாப்பும்

எல்லாப் பிணியும் என் தனைக் கண்டால்
நில்லாது ஓட நீ எனக்கு அருள்வாய்
ஈரேழ் உலகமும் எனக்கு உறவாக
ஆணும் பெண்ணும் அனைவரும் எனக்கா
மண்ணாள் அரசரும் மகிழ்ந்து உறவாகவும்

உன்னைத் துதிக்க உன்திரு நாமமும்
சரண பவனே ! சையொளி பவனே!
திரிபுர பவனே! திகழ்ஒளி பவனே!
பரிபுர பவனே ! பவமொழிப் பவனே!

அரிதிரு மருகா ! அமரா பதியைக்
காத்து தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்!
கந்தா ! குகனே ! கதிர்வே லவனே!
கார்த்திகை மைந்தா ; கடம்பா கடம்பனை

---

வயப்போத்து–சிங்கம்; விப்புரிதி–புண்கட்டி

இடும்பனை அழித்த இனியவேல் முருகா!
தணிகா சலனே! சங்கரன் புதல்வா!
கதிர்கா மத்துஉறை கதிர்வேல் முருகா;
பழநிப் பதிவாழ் பாலகுமாரா!

ஆவினன் குடிவாழ் அழகிய வேலா!
செந்தின் மாமலையுறும் செங்கல்வராயா!
சமரா புரிவாழ் சண்முகத்து அரசே
காரார் குழலாள் கலைமகள் நன்றாய்

என்நா இருக்க, யான் உனைப்பாட
எனைத் தொடர்ந்து இருக்கும் எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன் பரவசமாக
ஆடினேன் நாடினேன் ஆவினன் பூதியை

நேசமுடன் யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி
உன் பதம் பெறவே உன் அருள் ஆக
அன்புடன் இரட்சி அன்னமும் சொன்னமும்
மெத்தமெத் தாக வேலா யுதனார்
சித்திபெற்று அடியேன் சிறப்புடன் வாழ்க

வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்
வாழ்க வாழ்க வாரணத் துவசன்

வாழ்க வாழ்க என் வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை அடியேன் எத்தனை செயினும்
பெற்றவன் நீகுரு பொறுப்பது உன் கடன்

---

**வாரணம்–சேவல், துவசம்–கொடி, துவசன்–கொடியுடையவன்**

பெற்றவன் குறமகள் பெற்ற வளாமே
பிள்ளையென்று அன்பாய்ப் பிரியம் அளித்து
மைந்தனென் மீது உன் மனமகிழ்ந்து அருளித்
தஞ்சமென்று அடியார் தழைத்திட அருள்செய்

கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய
பாலன் தேவராயன் பகர்ந்ததை
காலையில் மாலையில் கருத்துடன்–நாளும்
ஆசா ரத்துடன் அங்கம் துலக்கி

நேச முடன் ஒரு நினைவது ஆகிக்
கந்தர் சஷ்டி கவசம் இதனைச்
சிந்தை கலங்காது தியானிப்பவர்கள்
ஒருநாள் முப்பத் தாறுஉருக் கொண்டு

ஓதியே ஜெபித்து உகந்து நீறு அணிய
அஷ்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர் சேர்ந்தங்கு அருளுவர்
மாற்றவர் எல்லாம் வந்து வணங்குவர்

நவகோள் மகிழ்ந்து நன்மை யளித்திடும்
நவமதன் எனவும் நல்எழில் பெறுவர்
எந்த நாளும் ஈரெட்டாய் வாழ்வர்
கந்தர்கை வேலாம் கவசத்து அடியை

வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியால் காண வெருண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிபொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்

சர்வ சத்துரு சங்கா ரத்தடி
அறிந்து எனது உள்ளம் அஷ்டலட்சுமிகளில்
வீரலட் சுமிக்கு விருந்துஉண வாகச்
சூரபத் மாவைத் துணித்தகை யதனால்

இருபத் தேழ்வர்க்கு உவந்து அமுது அளித்த
குருபரன் பழநிக் குன்றினில் இருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி
எனைத்தடுத்து ஆட்கொள் எந்தனது உள்ளம்

மேவிய வடிவுறும் வேலவா போற்றி
தேவர்கள் சேனாபதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி
திறமிகு திவ்விய தேகா போற்றி

இடும்பா யுதனே இடும்பா போற்றி
கடம்பா போற்றி கந்தா போற்றி
வெட்சி புனையும் வேலா போற்றி
உயர்கிரி கனக சபைக்கு ஓர் அரசே

மயில்நட மிடுவோய் மலரடி சரணம்
சரணம் சரணம் சரவண பவ ஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்.

## காப்பு

*குற்றமற்றவராகிய சிவபெருமான் அருளால் பெற்ற கந்தப் பெருமானில் ஆறாவது நாள் ஆகிய சஷ்டி நன்னாளில் ஓதுற்கு உரிய சஷ்டி கவசத்தைத் துதிப் போர்க்குக் கொடிய வினைகன் யாவும் அகன்றுவிடும். மனத்தை வருத்தும் துன்பங்கள் யாவும் நீங்கிவிடும். இக்கவசத்தை மனத்தில் நிலைபெறச் செய்து கொள்வோர்க்கு இம்மைக்கு உரிய பொருட்செல்வமும், மறுமைக்கு உரிய அழியாப் பேரின்பம் தரும் மோட்சச் செல்வமும் உண்டாகி, மிகுந்து பெரும் நிர்விகல்பச் சமாதி நிஷ்டையும் உண்டாகும்.*

*தேவர்களுடைய துன்பம் நீங்கும்படி அரக்கரோடு போரினைச் செய்து குமரப் பெருமானுடைய அழகிய பாதங்களைத் துதித்து தியானிப்போம்.*

# திருப்பணிகள்

1. இத்திருக்கோயில் சார்பில் ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தேவஸ்தான பி.வேணுகோபால் செட்டியார் ஆரம்ப மேல்நிலைப்பள்ளி, சென்னை – 112.

2. ஸ்ரீ முத்துக்குமார சுவாமி தேவஸ்தான இந்து ஆரம்ப மேல்நிலைப்பள்ளி, சென்னை – 3.

3. ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி தேவஸ்தான கண்ணபிரான் பத்மாவதி தொடக்கப் பள்ளி, ஒட்டேரி, சென்னை–600 012.

4. ஸ்ரீ முத்துக்குமாரசுவாமி கலைக் கல்லூரி, சென்னை–112.

5. கந்தகோட்டம் இலவச மருத்துவமனை (கந்தரலங்கார மண்படத்தில்) 156, இராசப்ப செட்டி தெரு, சென்னை–3.

6. இதனொடு 175, தம்பு செட்டிதெருவில் திருமதி சாமுண்டீஸ்வரி அம்மாள் பெயரால் இலவச மருத்துவமனையும், இத்திருக்கோயில் சார்பில் கந்தக்கோட்ட கலாலயம் வீணை வகுப்பும், பரதநாட்டியப் பயிற்சியும் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

இத்திருக்கோயிலில் அருள்மிகு மீனாட்சி அம்மனுக்கு பொன்னாலான கவசங்கள் செய்து அணிவிக்கும் திருப்பிணியினை மேற்கொண்டு வருகின்றோம். மேலும் தங்கத்தில் ஆன காவடி ஒன்றும் செய்விக்கும் பணியும் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

நடைபெற்றுக் கொண்டிருக்கும் மற்றும் நடைபெற இருக்கும் திருப்பணிகளுக்கு நன்கொடை வழங்க அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இங்ஙனம்,

**அறங்காவலர் குழு**



தவத்திரு

# வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்



வெளியீடு

கந்தக்கோட்டம், சென்னை - 3.